# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 6 | இதழ் 11 | ஜனவரி 10, 2020 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 6 | Issue 11 | January 10th, 2020 | Annual Subscription Rs. 100/-



புரிந்த பிறகும் பிரச்சினையா? - பகுதி 3



**பகவத் பாதை** தமிழ் மாத இதழ்

"நாம் செய்ய வேண்டிய செயல்களை முழுமனதுடன் செய்திடும் போது அதுவே தியானமாக அமைந்து விடுகிறது.

தண்ணீரைப் பின்னோக்கித் தள்ளி விட்டு ஒரு கப்பல் முன்னோக்கிப் பயணிப்பதை போல் அகம் சார்ந்த பிரச்சினையை பின்னோக்கித் தள்ளி விட்டு புறம் சார்ந்த செயலின் மீது நம் கவனத்தைச் செலுத்துவது ஒன்றே வெற்றிக்கான வழி."



– ஸ்ரீ பகவத்

# ஸ்ரீ பகவத் ஐயாவின் 3 நாள் ஞான முகாம்

நாள் : 24.1.2020 காலை 11.00 மணிமுதல் 26.1.2020 மதியம் 3.00 மணிவரை
இடம் : ஸ்ரீ பகவத் பவன், சேலம்.

செலவுப் பகிர்வு ரூ. **3000/-** மட்டும்.
செலவுப் பகிர்வு கட்டணத்தை வழங்க இயலாதவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கலாம்.
நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன.

முன்பதிவிற்கு **ஸ்ரீ பகவத் மிஷன்,**
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.
**97904118421, 99942 05880, 97891 65555**

அறிவிப்பு : அன்பர்கள் பலரின் வேண்டுகோளுக்கு இணங்க ஆங்கிலத்தில் நடைபெற இருந்த ஞான முகாம் தமிழாக மாற்றப்பட்டுள்ளது.

## கோடையில் இயற்கை சூழல் மிகுந்த **ஏற்காடு மலைப் பிரதேசத்தில் 4 நாள்**

உள்ளே


| | |
|---|---|
| புரிந்த பிறகும் பிரச்சினையா? (பகுதி 3) | 3 |
| ஸ்ரீ பகவத் குடில்கள் | 6 |
| கேள்வி பதில் | 7 |
| ஸ்ரீவில்லிப்புத்தூரில் ஒரு நாள் ஞான முகாம் | 9 |
| சென்னை ஸ்ரீபகவத் பவன் | 9 |
| நிகழ்ச்சி நிழல்கள் | 10 |
| ஆசிரியர் பகுதி | 11 |
| ஜென்கதை - பூவும் கல்லும் ஒன்றுதான் | 12 |


கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission


31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com
V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075


# சிறப்பு ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

இடம் : House of Peace (Glass House) அமைதி இல்லம், ஏற்காடு.
நாள் : 30-4-2020 வியாழக்கிழமை மாலை 4 மணி முதல் 3-5-2020 ஞாயிறு மாலை 3.00 மணி வரை

- இது கோடை காலத்திற்கு ஏற்ற சுற்றுலா தலமாக அமைந்திருப்பதால் குடும்பத்துடன் பங்கு பெறலாம்.
- ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது. தனி அறைகள் 10 மட்டும் உள்ளதால் குடும்பத்துடன் வருபவர்களுக்கு மட்டும் தனி அறை கொடுக்கப்படும்.
- உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு **ரூ. 5000**/- மட்டுமே.
- 90 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் மார்ச் 31ம் தேதிக்குள் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம்.

**முன்பதிவு செய்யும் வழிகள் :**

**M.O, D.D. (or) Cheque :** வரைவோலை அனுப்புபவர்கள் : A/c. Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**Direct Payment :** நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் : Sri Bagavath Mission, HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC : HDFC 0001590 என்ற வங்கிக் கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

**ஸ்ரீ பகவத் மிஷன்**
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.
கைப்பேசி : **9994205880, 97891 65555**





# புரிந்த பிறகும் பிரச்சனையா? பகுதி 3

- ஸ்ரீ பகவத்

இதே தலைப்பில் ஏற்கனவே இரண்டு கட்டுரைகள் வெளி வந்துவிட்டன. இது மூன்றாவது கட்டுரை.

**இந்தக் கட்டுரையினுள் நுழையும் முன்பு 10–12–2019 இல் வெளிவந்த இதனுடைய முந்தைய கட்டுரையைப் படித்து A, B, B-1, B-2 என்றால் என்ன என்பதை தெரிந்துகொள்ள வேண்டுகிறேன்.**

A என்பது அக உணர்ச்சிகள் மற்றும் அனுபவங்கள் என்பதையும்

B என்பது புறச் செயல்களையும் B1 என்பது புறச்செயல் சார்ந்த மனதின் செயல்பாடு என்பதையும்

B-2 என்பதும் கிட்டத்தட்ட Bயையேயும் குறிப்பிடுகிறது.

இங்கு நாம் B மற்றும் B-2 பற்றி பொதுவாக தெரிந்து கொண்டால் போதும்.

B-1ன் செயல்பாடு பற்றிதான் நாம் நுணுக்கமாகத் தெரிந்து கொள்வது தேவையாக உள்ளது.

"அகத்தை (A) நாம் கண்டுகொள்ளத் தேவையில்லை; புறத்தை (B) மட்டுமே கணக்கில் எடுத்துக்கொண்டால் போதும்" என்ற கருத்து – தெளிவு சிலருக்குப் போதுமானதாக உள்ளது. ஆனால் பலருக்கு மேலும் சில விளக்கங்கள் தேவைப்படுகின்றன.

“Aயில் நமக்கு வேலை இல்லை; Bயில் மட்டும் தான் நமக்கு வேலை” – என்று புரிந்து கொள்வது எது?

இப்படி புரிந்து கொள்வது A யா? அல்லது B-1 ஆ?

Aயில் நமக்கு வேலை இல்லை; Bயில் மட்டும்தான் நமக்கு வேலை உள்ளது என்று புரிந்து கொள்வது A அல்ல. B-1தான் இப்படிப் புரிந்து கொள்கிறது.

நேற்று காலையில் வாக்கிங் சென்றுவிட்டு திரும்பிக் கொண்டிருந்தேன். ஒரு திருப்பத்தில் நான் வரும்போது எதிர்பாராத நிலையில் என்னை நோக்கி இரண்டு நாய்கள் குறைத்துக்கொண்டு பாய்ந்து வந்தன.

என்ன நடக்கிறது என்பதை என்னால் சரிவர புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனாலும் எனது கையில் வைத்திருந்த நீண்ட கம்பை எனக்குக் குறுக்காக வைத்து அவை என்மீது பாய்ந்து விடாமல் தடுத்தேன். நாய்கள் என்னை கடந்து சென்று விட்டன.

அதன் பிறகுதான் என்ன நடந்தது என்பது எனக்குப் புரிந்தது. அந்த இரண்டு நாய்களில் ஒன்று எனக்குப் பழக்கமானது. இன்னுமொன்று எனக்குப் பழக்கம் இல்லாதது.

உண்மையில் எனக்குப் பழக்கமான நாய் பழக்கமில்லாத நாயைத் துரத்தியிருக்கிறது. பழக்கமில்லாத நாயும் குறைத்துக்கொண்டே தப்பி ஓடி இருக்கிறது.

பாதையின் திருப்பத்தில் அவை வந்ததால் அவை எங்கிருந்து வந்தன என்பதைக் காண முடியவில்லை.

அவை இரண்டும் என்னை நோக்கி வரும்போது எனக்கு என்ன விதமான மன உணர்ச்சி ஏற்பட்டிருக்கும்?

பயம் ஏற்பட்டிருக்குமா?

ஆனால் எனக்கு பயம் எதுவுமே ஏற்படவில்லை. என்னை காப்பாற்றிக் கொள்ளும் செயல் மட்டும்தான் ஏற்பட்டது.

நீங்கள் உங்களுடைய காரை சாதாரணமான வேகத்தில் ஓட்டிச் செல்கிறீர்கள். எதிர்பாராத நிலையில் பைக் ஒன்று குறுக்கே வந்ததால் விபத்து ஏற்பட்டு விடுகிறது.

விபத்து ஏற்படும் போது உங்களுடைய மனதில் என்னவிதமான உணர்ச்சி ஏற்படும்?

பயம் ஏற்படுமா?

பயம் ஏற்படாது. எச்சரிக்கை உணர்வுதான் ஏற்படும். அதனைப் பயன்படுத்தி விபத்தைத் தவிர்க்கும் முயற்சியில் தான் நீங்கள் ஈடுபடுவீர்கள்.

ஆனால் தொடர்ந்து காரை ஓட்டிச் செல்லும்போது மீண்டும் இத்தகைய விபத்து ஏற்பட்டு விடுமோ என்ற நினைவுகள் தொடர்ந்து நம்மை பயமுறுத்திக் கொண்டே இருக்கும்.

இந்த பயம் யாவும் சூழ்நிலையினால் ஏற்பட்ட பயம் அல்ல. சூழ்நிலையை நாம் நமது நினைவுகளின் மூலம் ஏற்றுக் கொண்டதால் ஏற்பட்ட பயமாகும்.

B-1ன் காரணமாக ஏற்பட்ட பயமாகும்.

எதிர்பாராத நிலையில் நாம் நாய்களையோ விபத்தையோ சந்திக்கும் போது B-1க்கு செயல்பாடு ஏதாவது உள்ளதா அல்லது இல்லையா? B-1ன் செயல்பாடு இல்லாமலேயே அவை நடந்து விடுகின்றனவா?

நமது எல்லா விதமான செயல்பாடுகளுமே நம் மனதின் தொடர்போடுதான் நடைபெறுகின்றன. நாம் எதிர்கொள்ளும் ஆபத்துகளில் நம்மை அறியாமல் நாம் பங்கு வகித்தாலும் கூட, அதுவும் நம் மனதின் செயலே. இந்த B-1ன் செயலே.

எந்தவித முன்னேற்பாடுகளும் திட்டங்களும் இல்லாமல் நாம் எதிர்கொள்ளும் செயல்களில் பங்கேற்கும் அம்சமும் இந்த B-1ல் உள்ளது. திட்டமிட்டு செயல்களில் ஈடுபடும் அம்சமும் இந்த B-1 இல் தான் உள்ளது.

"நாம் என்ன செய்ய வேண்டும்? நாம் செய்வதற்கு என்ன இருக்கிறது?" – என்பதன் மீது தான் B-1ன் கவனம் இருக்க வேண்டும்.

நடந்து முடிந்தவற்றின் மீது நாம் கவனம் செலுத்துவோமாயின் நடக்கவேண்டியதன் மீது நாம் செலுத்த வேண்டிய கவனம் குறைந்து விடும்.

நடந்து முடிந்த அனைத்தும் நம் மனதில் எந்தப் பகுதியை சேர்ந்தது?

B-1ஐச் சேர்ந்தது தானா?

இல்லை. அது B-1ஐ சார்ந்தது அல்ல. அவை அனைத்தும் Aயைச் சார்ந்தவையே ஆகும்.

நிகழ்காலத்தில் நடக்கும் செயல்கள் அனைத்தும் கிட்டத்தட்ட தாமாகவே நடந்து விடுகின்றன. அவற்றை அகம் – புறம் (A-B) என்று கூட பிரித்துப் பார்க்க முடியவில்லை.

"என்ன செய்யவேண்டும்? எப்படி செய்யவேண்டும்?" என எதிர்காலச் செயல் குறித்து நாம் சிந்திக்கும் போதுதான் அகம், புறம் என பிரித்துப் பார்க்க வேண்டியது உள்ளது.

எதிர்காலம் என்பது நிகழ் கணத்தைக் கடந்து அடுத்து வரும் கணமும் எதிர்காலத்தைச் சார்ந்ததே.

ஆகவே செயல்களைப் பொறுத்தும்கூட, தாமாக நடைபெறும் செயல், நாமாகச் செயல் படுத்தும் செயல் என இரண்டு பிரிவாக உள்ளது.

தாமாக நடைபெறும் செயலில் நமது சிந்தனைக்கும் செயலுக்கும் இடைவெளி கிடையாது.

அதற்காக எல்லா செயல்களும் தாமாக நடந்து விட்டு போகட்டும் என விட்டு விட முடியாது.

நாய் குறைத்துகொண்டு நம்மை நோக்கிப் பாய்ந்து வரும் போது,

அது ஏன் அப்படி வருகிறது? எங்கிருந்து வருகிறது? நாம் என்ன செய்ய வேண்டும்? நாம் என்ன செய்யக்கூடாது?

– என்றெல்லாம் ஆய்வு செய்வதற்கான அவகாசம் எதுவும் நமக்குக் கிடையாது.

"தப்பிக்க வேண்டும்" என்ற ஒரு சிறு தூண்டுதல் மட்டும் நம்மை அறியாமல் நமக்குள் ஏற்பட்டு நம்மை அறியாமலேயே நாமும் செயலில் ஈடுபட்டு நம்மைக் காப்பாற்றிக் கொள்கிறோம்.

நிதானத்துக்கு வந்த பிறகுதான் என்ன நடந்து முடிந்துள்ளது என்பதே நமக்குத் தெரிகிறது. அந்த நிலையில்தான் அடுத்து நாம் செய்ய வேண்டிய செயல் குறித்து நாமாகச் சிந்தித்து முடிவெடுக்க முடியும்.

மன இயக்கத்தை நாம் அகமென்றும் புறத்தில் நாம் ஈடுபடும் செயல்களை புறமென்றும் நாம் பிரித்துக் கொண்டுள்ளோம்.

உலகத்தைப் பொறுத்த அளவில் தாமாக இயங்கும் அம்சமும் உள்ளது, நாமாக இயக்கும் அம்சமும் உள்ளது.

நமக்கு ஏற்படும் சிந்தனை மற்றும் மன உணர்ச்சிகளை நாம் அகம் என்று குறிப்பிடுகின்றோம். அவற்றை நாம் ஏற்படுத்தியிருக்கவில்லை. அவை யாவும் தாமாக ஏற்பட்டவை. நாமாக எதையாவது சிந்தித்தால் அது தாமாக ஏற்பட்டதல்ல. அது நாமாக செயல்படுத்திய ஒன்று.

நாமாகச் சிந்தித்தாலும் கூட அதுவும் நம் மனம் சார்ந்த ஒன்றுதான். அதுவும் நம் அகம் சார்ந்த ஒன்று தான்.

அது அகமாக இருந்தாலும் கூட நாமாகச் சிந்திப்பது என்பது நமது அகத்தில் உள்ள தாமாக இயங்கும் பகுதியைச் சேர்ந்தது அன்று.

அகத்தில் உள்ள நாமாக இயக்கும் பகுதியைச் சேர்ந்தது தான் அது.

மொத்தத்தில்–

தாமாக இயங்கும் மன இயக்கம் ஆனாலும் சரி,

அல்லது தாமாக இயங்கும் செயல்களானாலும் சரி,

அவை அனைத்துமே நாம் A என்று குறிப்பிடுகின்றோம்.

நமக்கு கோபமோ வருத்தமோ அல்லது பயமோ ஏற்படும் போது அது ஏற்படும் கணத்தில் அது A ஆக உள்ளது.

அடுத்த கணத்தில் நாம் நமக்கு ஏற்பட்ட உணர்ச்சிகளை அறிவுப்பூர்வமாகப் புரிந்து கொள்கிறோம். இப்படிப் புரிந்து கொள்வதும் நமது செயல் அம்சமான மனதுதான். இதை இங்கு B1 என்று குறிப்பிடுகின்றோம்.

இந்த B1 என்பது செயற்கையானது; செயலால் ஆக்கப்பட்டது. அதனால் அதற்கு எப்போதுமே வேலை இருந்து கொண்டே இருக்கிறது.

இந்த B-1க்கு Bயில் மட்டுமல்லாமல் A யிலுங்கூட வேலை உள்ளது.

அதற்கு B யில் வேலை இருக்கலாம்; ஆனால் Aயில் என்ன வேலை இருக்க முடியும்.

B-1க்கு Aயில் நேரடியாக எந்த வேலையும்

இல்லாவிட்டாலும்கூட A சம்பந்தப்பட்ட சில முக்கியமான வேலைகள் இந்த B-1க்கு உண்டு.

அது என்ன வேலை?

Aயை நிர்வாகம் செய்து வடிவமைப்பதா?

A என்பது நடந்து முடிந்ததை மட்டுமே குறிக்கிறது. அது மனம் சம்பந்தப்பட்டதாக இருந்தாலும் சரி அல்லது செயல் சம்பந்தப்பட்டதாக இருந்தாலும் சரி. முடிந்து போன அனைத்தும் – நிகழ்ந்து முடிந்தது அனைத்தும் A என்பதையே குறிக்கிறது.

நடந்து முடிந்த அவற்றின் மீது நமக்கு என்ன வேலை இருக்க முடியும்?

அது சம்பந்தமாக நமக்கு எந்த வேலையும் கிடையாது என்று புரிந்து கொள்வது கூட ஒரு வேலைதானே. A சம்பந்தமாக தனக்கு எந்த வேலையும் கிடையாது என்பதைப் புரிந்து கொள்வதுதான் A சம்பந்தப்பட்ட B-1 ன் வேலை.

A என்பதை இயற்கையின் செயல் அல்லது இறைவனின் செயல் என எடுத்துக்கொள்ளலாம். அதுதான் தலைவிதி அல்லது பிராரப்த கர்மா என எடுத்துக்கொள்ளலாம்.

"நடக்க வேண்டியது நடந்து முடிந்துவிட்டது. நாம் என்ன செய்ய வேண்டுமோ அதில் மட்டுமே நமது கவனத்தைச் செலுத்த வேண்டும். நடந்து முடிந்தது சம்பந்தமாக நமக்கு எந்த வேலையும் கிடையாது" என்று Aயை கைவிடுவது தான் B-1ன் வேலை.

B என்பது இனி நடக்க வேண்டிய புறச் செயல்.

புறச் செயல் சம்பந்தமாக – B சம்பந்தமாக B-1க்கு என்ன வேலை?

புறச் செயல் என்பது நம்மை அறியாமல் நிகழ்ந்தால் அதற்கு நாம் பொறுப்பல்ல. B-1 பொறுப்பல்ல.

நாமாக செய்யும் புறச் செயல்கள் அனைத்துக்கும் நாமே பொறுப்பு. –B-1 தான் பொறுப்பு.

தர்ம நியாயங்கள், ஒழுக்கங்கள் அனைத்தும் புறச் செயல்கள் சார்ந்தவையே.

நாம் ஆரம்பித்துள்ள தொழில்கள், நாம் வகித்து வரும் பதவி, நமது குடும்பம் மற்றும் உறவினர்கள், நண்பர்கள் சம்பந்தமாக கடமைகள் ஆகிய அனைத்தும் புறச் செயல் சார்ந்தவையே.

இவற்றில் நமது பங்கு என்ன என முடிவு செய்வது இந்த B-1ன் பணி. இவை அனைத்து அம்சங்கள் சம்பந்தமாகவும் நிதானமாக சிந்தித்து ஒரு முடிவுக்கு வரவேண்டியது இதனுடைய கடமையே ஆகும்.

செய்ய வேண்டிய செயலை முடிவு செய்த பிறகு முழு ஈடுபாட்டுடன் அந்தச் செயலில் ஈடுபடுவதும் B-1ன் கடமையே ஆகும்.

ஒரு செயலை இவ்வாறு நாம் செய்வதற்கு தன்னம்பிக்கையை வளர்த்துக் கொள்ள வேண்டுமா?

தன்னம்பிக்கையோடு இருப்பது, மன அமைதியோடு இருப்பது, ஆர்வத்துடன் இருப்பது என நமது மன இயக்கத்தை வடிவமைக்கும் எந்த பொறுப்பும்B-1க்கு கிடையாது.

நாம் செய்யவேண்டிய செயலின் அவசியத்தையும் செயலின் முக்கியத்துவத்தையும் B-1 புரிந்து கொண்டால் மட்டும் போதும். தேவையான தன்னம்பிக்கை, ஆர்வம் அனைத்தும் B-1க்கு வந்துவிடும்.

தொடர் பிரச்சினைகளை நாம் சந்திக்கும் போது மன வேதனைகளும் தொடர் நிகழ்வாக இருப்பதற்கான வாய்ப்பும் உண்டு.

புறப் பிரச்சினைகளில் வெற்றிகரமாக நிர்வகிக்க முடியாத நிலையில் நமது செயல்களைப் பொறுத்து ஒரு நிச்சயமற்ற தன்மையே உள்ளது. மன வேதனையும் தொடர் நிகழ்வாக அமைந்துள்ளது.

இந்நிலையில்B-1ன் செயல்பாடு எப்படி இருக்க வேண்டும்?

மன வேதனை ஏற்படும் போது நம்மை அறியாமலேயே அதிலிருந்து விடுபட நாம் விரும்பி விடுகிறோம்.

மன வேதனையும் அதிலிருந்து விடுபட ஏற்பட்ட உந்துதலும் தாமாக ஏற்பட்டவை. இவை இரண்டுமே A அம்சம்தான்.

இந்த இரண்டு அம்சங்களிலும் எந்தத் தவறும் கிடையாது.

அவை தாமாக ஏற்பட்டவை; இயற்கையானவை. அங்கு B-1க்கு எந்த வேலையும் கிடையாது.

இயற்கையாக ஏற்படக்கூடிய ஒன்றுதான் ஏற்பட்டுள்ளது என்ற முடிவுக்குB-1 வரும்போது,

இன்பத்தையும் துன்பத்தையும் சமமாக ஏற்றுக் கொள்ளும் ஒருவிதத் தன்மை இந்த B-1க்கு ஏற்படுகிறது.

அவ்விதமான மனநிலையை **தீரம்** என்று சாஸ்திரங்கள் விவரிக்கின்றன.

அந்நிலையில் "செய்ய வேண்டுவது என்ன?" என்பதில் மட்டும் நமது கவனம் எளிதாக செல்லும் தகுதி நமக்குக் கிடைத்துவிடுகிறது.

புறத்தைப் பொறுத்தவரையிலும் வெற்றிதான் நமது இலக்கு.

வெற்றிக்கான சாத்தியக்கூறு குறைவாக இருக்கும் நிலையில் நாம் காத்திருப்பதும் நிதானமாகச் செயல்படுவதும் அவசியம் என்ற முடிவுக்கு B-1 வரவேண்டும்.

ஏதாவது ஒன்றில் நம் மனதை இணைப்பதை தியானம்–யோகம் என்று விவரிக்கிறார்கள்.

நாம் செய்ய வேண்டிய செயல்களை முழுமனதுடன் செய்திடும் போது அதுவே தியானமாக அமைந்து விடுகிறது.

தண்ணீரைப் பின்னோக்கித் தள்ளி விட்டு ஒரு கப்பல் முன்னோக்கிப் பயணிப்பதை போல்

A யைப் பின்னோக்கித் தள்ளிவிட்டு B யை நோக்கி பயணிப்பது ஒன்றே B-1ன் பிரதான வேலை. ★

# ஸ்ரீ பகவத் குடில்கள்





அன்பிற்கினிய ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் பவன் ஆசிரமம், சேலம் பெரியகவுண்டாபுரத்தில் இயற்கை எழில் மிகு ஜருகு மலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளதை அனைவரும் அறிவோம்.

இங்கு ஒவ்வொரு மாதமும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இதில் பலரும் கலந்து கொண்டு ஞானத் தெளிவு பெற்றுச் செல்கின்றனர்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இங்கு குடும்பத்துடன் வந்து தங்கிச் செல்வதற்கு ஏற்ற வகையில் எல்லா வசதிகளுடன் கூடிய 32 அறைகளை கட்ட, அதாவது 8 அறைகளை கொண்ட நான்கு கட்டடங்களை கட்ட முடிவு செய்துள்ளோம்.

மேலும் ஸ்ரீ பகவத் காட்டேஜ் உறுப்பினர் நன்கொடையாக ஒரு குடிலுக்கு ரூபாய் 5 லட்சம் என நிர்ணயம் செய்திருந்தோம். அந்த வகையில் முதற்கட்டமாக 8 உறுப்பினர்கள் சேர்ந்துள்ளதால் 8 அறைகளை கொண்ட முதல் கட்டட வேலை மிகச் சிறப்பாகவும் விரைவாகவும் நடைபெற்றுக் கொண்டு வருகிறது.

இக் கட்டடம் கட்டுவதற்கு நாம் தரமான பொருட்களை பயன்படுத்துவதால் கட்டடத்திற்கு ஆகும் செலவுகள் பொறியாளரின் செலவு மதிப்பீட்டை (Expense Estimate) விட அதிக அளவில் செலவாகிக் கொண்டிருக்கிறது. ஆதலால் இந்த 8 குடில்களுக்குப் பிறகு அடுத்ததாக அமையவிருக்கின்ற குடில்களுக்கு உறுப்பினர் நன்கொடையை ரூபாய் 7லட்சம் என நிர்ணயம் செய்துள்ளோம்.

தற்போது நடந்து கொண்டிருக்கின்ற கட்டடப் பணி இன்னும் ஐந்து மாதத்திற்குள் நிறைவடைந்து விடும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

உறுப்பினராக இணைவதற்கு ஆர்வமும் வாய்ப்பும் உள்ளவர்கள் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

அன்புடன்

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3.

**99942 05880, 97891 65555**

V.A.P. சரவணன். சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

விஞ்ஞானத்திலும் பொருளாதாரத்திலும் உயர்ந்த மேலை நாடுகளால் ஆன்மிகத்தில் முன்னேற முடியவில்லை. ஆன்மிகத்தில் உயர்ந்த நம்மால் பொருளாதாரத்தில் உயர முடியவில்லை. இரண்டிலும் முன்னேற்றம் அடைவதற்கு பொதுவான தீர்வு உண்டா?

**கேள்வி :** பொருளாதாரத்தில் முன்னேறிய பல மேலை நாடுகளில் வாழும் மக்கள் உளவியல் ரீதியாகவும், மன அழுத்தத்தாலும் மிகவும் பாதிப்படைந்துள்ளனர். இவர்கள் மன அழுத்தத்திலிருந்து விடுபடவும் மன நிம்மதிக்காகவும் இந்தியாவில் இருக்கும் ஆன்மிகத்தை நாடி வருகிறார்கள்.

பொருளாதாரத்திலும் விஞ்ஞானத்திலும் முன்னேற்றம் அடைந்த இவர்களால் உளவியல்ரீதியான பாதிப்புக்கு ஏன் தீர்வு காணமுடியவில்லை? ஆன்மிகம், மனம் சம்பந்தப்பட்ட நுட்பமான பல விஷயங்களை மேலை நாட்டவருக்கு தீர்வு வழங்கும் தகுதியில் இருக்கும் நம்மால் ஏன் பொருளாதாரத்திலும், அறிவியலிலும், அவர்களைப்போல் இன்னும் வளர்ச்சியடைய முடியவில்லை?

நம் நாடு முன்னேற்றம் அடையாமல் சிரமப்படுவதற்கான காரணம் என்ன?

மேலை நாட்டு மக்களுக்கு உளவியல் ரீதியான தீர்வாகவும், நம் நாட்டினருக்கு அறிவியல், பொருளாதாரம் போன்றவற்றில் முன்னேற்றம் அடைவதற்கான தீர்வாகவும், இரண்டிற்கும் பொதுவான தீர்வு எதுவும் நமது பகவத் ஐயாவின் அணுகுமுறையில் இருக்கிறதா?

**பதில் :** இது மிகவும் ஆழமான கேள்வி. இந்தக் கேள்விக்கான பதிலை நாம் மூன்று விதமான கோணங்களில் பார்க்க இருக்கின்றோம்.

**முதல் அணுகுமுறை :** நம்முடைய ஆரம்ப காலக்கட்டத்தில் தனிமனித ஒழுக்கத்திற்காகவும், அற நெறிக்காகவும், இயற்கையையும், ஞானத்தையும், புரிந்த கொண்டு வாழ்வதற்காக குரு குல கல்வி உருவாக்கப்பட்டது.

அது பிற்காலங்களில் எல்லோருக்கும் சாத்தியப்படாமல் போனது. ஞானிகளும், மகான்களும், மனிதகுலம் எளிமையாக உண்மையை விளங்கிக் கொள்வதற்காக பக்தியை உருவாக்கினார்கள். பக்தியின் மூலம் தனி மனித ஒழுக்கத்தையும், அறநெறியையும் முதன்மை யாக்கி ஞானத்தை பக்தியின் உட்பொருளாக்கி சரணாகதியின் மூலம் விளங்கிக்கொள்ளும் வகையில் உருவாக்கினார்கள். இதனால் ஆன்மிகத்தில் மக்கள் உயர்ந்த நிலையை அடைந்தார்கள்.

பக்தி என்பது தொடக்கத்தில் இறைவனுக்கு தேவையானவற்றை நாம் கொடுப்பதாகவும். நமக்கு தேவையானவற்றை இறைவன் நமக்கு அளிப்பதாகவும் என இப்படி கொடுக்கல் – வாங்கலில் தொடங்குகிறது. இறுதியில் பக்தியின் முழுமையாக "எல்லாமே இறைவன் செயல்" என்ற சரணாகதியில் முடிவடைகிறது.

இப்படி பக்தியின் மூலம் இறைவனை சரண் அடைந்தவர்கள்தாம் இந்தியாவில் வாழ்ந்த ஞானிகளும் மகான்களும். இவர்களது அணுகுமுறையான "என் செயல் என்று எதுவும் இல்லை; எல்லாம் இறைவனின் செயலே", "அவன் இன்றி ஓர் அணுவும் அசையாது" என தனக்கென எந்த செயலும் இன்றி எல்லாம் அவன் செயல் என்ற சரணாகதியில் நம் நாட்டு மக்கள் வாழ்கிறார்கள். இது முதல் அணுகுமுறை.

இந்தச் சரணாகதி அணுகுமுறையால் செயலோ, அறிவோ முக்கியத்துவம் பெறவில்லை. இதனால் இவர்களால் பொருளாதாரத்திலும் அறிவியலிலும் முன்னேற்றம் அடையமுடியவில்லை.

**இனி இரண்டாவது அணுகுமுறையை பார்ப்போம்.**

இங்கு அறிவும் விஞ்ஞானமும் மட்டுமே முக்கியத்துவம் பெறுகிறது. இதுதான் மேல்நாட்டு கலாச்சாரத்தின் வளர்ச்சி.

அறிவின் துணைகொண்டு தனிமனித வாழ்க்கை வசதிகளை பெருக்கிக்கொள்வது, வேலைகளை எளிமையாக செய்து முடிப்பதற்கான புதிய அறிவியல் கண்டுபிடிப்புகளை உருவாக்குவது. இதனால் நாட்டின் தொழில்துறையில் முன்னேற்றம், அறிவியலில் முன்னேற்றம் என இப்படி பல வெற்றிகளை அடைந்தனர். இதனால் இவர்கள் பொருளாதாரத்திலும் விஞ்ஞானத்திலும் முன்னேற்றமடைந்தார்கள்.

இதே அணுகுமுறையில் அறிவைக்கொண்டு மனதையும் வெல்ல முயன்றார்கள். ஆனால் மனதளவில் மட்டும் வெற்றியடைய முடியவில்லை. மனநிம்மதியையும் உருவாக்க முடியவில்லை. அறிவின் துணைகொண்டு பல கருவிகளை உருவாக்கி வேலையை எளிமை ஆக்கிவிட்டார்கள். ஆனால் அதே அறிவியலினால் மன அமைதியை உருவாக்க முடியவில்லை. அறிவியலின் மூலம் மனதையும் வென்றுவிடலாம் என்று தப்புக் கணக்கு போட்டுவிட்டனர். ஒட்டுமொத்த மன இயக்கத்தையே அறிவியலின் மூலம் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர முடியும் என்று இன்றளவிலும் போராடிக்கொண்டிருக்கிறார்கள். பல விஞ்ஞானிகள்,

சுயமுன்னேற்ற சிந்தனையாளர்கள் என இப்படி பலர் தங்கள் மனதை கட்டுபாட்டுக்குள் கொண்டு வர முயன்றும் முடியாமல் பலமுறை தோற்றுப்போய் வேறு எந்த ஒரு வழியும் தெரியாமல் மன அழுத்தத்திற்கு உள்ளாகி மனமுறிவு, மனச்சிதைவு எனப் பலவகையான மன நோய்களால் பாதிக்கப்பட்டு இறுதியாக தற்கொலையில் போய் முடித்திருக்கிறார்கள்.

புறத்தில் அறிவைக்கொண்டு பொருளாதாரத்திலும் விஞ்ஞானத்திலும் முன்னேற்றம் அடைந்த இவர்களால், அகத்தில் அறிவில் இயலாமையை, அறிவின் எல்லையை விளங்கிக் கொள்ளாததால் மட்டுமே இவர்களுக்கு இவ்வாறு நிகழ்கிறது.

அறிவியலின் துணையினால் பல வெற்றிகளை அடைந்தவர்கள் மனதை வெற்றி கொள்ள முடியாமல் போராடி இறுதியாக அடைந்தது தற்கொலை மட்டுமே.

**இனி மூன்றாவது அணுகுமுறையான நமது ஸ்ரீ பகவத் அய்யாவின் அணுகுமுறையைப் பார்ப்போம்.**

மனிதகுலம் எல்லோருக்குமான பொதுவான ஒரு நிரந்தர தீர்வு கிடைக்குமா? என்று மனிதகுலம் ஏங்கித்தவித்தது.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மனதின் இயக்கத்தைப் பற்றிய புதிய அணுகு முறை ஒன்றை அறிவியல்பூர்வமாக எல்லோராலும் ஏற்றுக் கொள்ளும் வண்ணம் எளிமை ஆக்கினார். தனது 40 ஆண்டுகால கடுமையான பயிற்சி முயற்சிகளுக்குப் பிறகு மனதின் இயக்கத்தைப் பற்றிய ஒரு புதிய அணுகுமுறையை கண்டுபிடித்தார். அந்தக் கண்டுபிடிப்பு தான் **ஞான விடுதலை** என்ற பெயரில் புத்தகமாக ஆன்மிக அன்பர்களுக்கு வழங்கினார். மனதால் துன்பப்படும் உலகியலில் வாழும் சாதாரண மனிதர்களுக்கு **கவலைகள் அனைத்துக்கும் தீர்வு** என்ற பெயரில் மனோதத்துவ அடிப்படையில் ஒரு புத்தகமாகவும் வழங்கினார்.

இதுவரையிலும் வந்த ஞானிகளின் வரிசையில் இருந்து இவரது அணுகுமுறை சற்று வித்தியாசப்படுகிறது. மனதை அகம் – புறம் என இரண்டு பிரிவுகளாக பிரித்தார். அகம் இயற்கையானது. நமது கட்டுப்பாட்டில் இல்லாதது. அங்கு நமக்கு எந்த வேலையும் இல்லை எனவும் புறம் நாமாக சிந்தித்து செயல்படும் பகுதி, புறத்தில் அறிவைப் பயன்படுத்தி பல நல்ல செயல்களை நமக்கும் சமுதாயத்திற்கும் செய்துகொள்ள முடியும் என்பதே இந்த மூன்றாவது அணுகுமுறை.

முதல் அணுகுமுறையில் அகத்திலும் புறத்திலும் சரணாகதி மட்டுமே இருந்தது. இங்கு அறிவும் செயலும் முக்கியத்துவம் பெறவில்லை.

இரண்டாவது அணுகுமுறையில் அறிவும் விஞ்ஞானமும் மட்டுமே முக்கியத்துவம் பெற்றது. அறிவின் எல்லையையும் இயலாமையையும் விளங்கிக்கொள்ளாததால் சரணாகதி ஏற்படவில்லை.

மூன்றாவது அணுகுமுறையில் அகத்தில் சரணாகதியும் புறச் செயலில் அறிவையும் பயன்படுத்தி அகதளவில் ஞானியாகவும் புறத்தில் பொறுப்புள்ள மனிதர்களாகவும் வாழும் கலையை உருவாக்கினார் ஸ்ரீ பகவத் அய்யா அவர்கள்.

இந்த மூன்று அணுகுமுறையையும் எளிமையாகப் புரிந்துகொள்ள ஓர் உதாரணத்தைப் பார்ப்போம்.

இருபுறமும் கூர்மையாக்க பட்ட ஒரு கத்தி. நாம் இந்த கத்தியை பயன்படுத்தி காய்கறிகளை நறுக்க வேண்டும்.

இரு புறமும் கூர்மையாகப்பட்ட கத்தி முழுவதற்கும் உரை போட்டனர் நமது மகான்கள். இதனால் கைகள் காயப்படவில்லை அதே நேரம் காய்கறிகளையும் நுட்பமாக சரியாக வெட்ட முடியவில்லை. எல்லாம் அவன் செயல் என்று புறத்திலும் செயலுக்கும் அறிவுக்கும் முக்கியத்துவம் தர தவறிவிட்டனர். மனதின் அகம் புறம் இரண்டு பகுதியுமே இறைவன் செயல் என்பதற்கான முதல் அணுகுமுறை குறிக்கிறது.




இரண்டாவது அணுகுமுறையில்,

கத்தியின் இருபுறமும் கூர்மையாக இருப்பதால் காய்கறிகளை வெட்டும் அதே நேரம் நாம் பிடித்திருக்கும் கத்தியின் கூர்மையான மறுபுறம் நம் கைகளையும் காயப்படுத்திவிடுகிறது.




அதாவது புறத்தில் அறிவின் துணைகொண்டு செயல்படுவதால் புறத்தில் வளர்ச்சியும், அதே அறிவு அகத்தில் குறுக்கிடுவதால் மனப் போராட்டமும் ஏற்பட்டு மனம் சம்பந்தப்பட்ட அத்தனை பிரச்சனைகளும் ஏற்படுகின்றன.

மூன்றாவது அணுகுமுறையில்,

இருபுறமும் கூர்மையாக்கப்பட்ட கத்தியில் காய்கறிகளை வெட்டும் பகுதிக்கு கத்தியின் கூர்மையையும் நாம் கைப்பிடிக்கும் பகுதிக்கு உறையையும் பயன்படுத்துகிறோம். இதுவே புத்திசாலித்தனமான புதிய அணுகுமுறை ஆகும். கத்தியின் கை பிடிக்கும் பகுதிக்கு உறை போடுவது என்பது, அகச் சரணாகதியைக் குறிகிறது. காய்கறியை வெட்டும் கத்தியின் பகுதிக்கு கூர்மையை பயன் படுத்துவது என்பது புறச்செயலுக்கு அறிவைப் பயன்படுத்துவதை குறிக்கிறது. கூர்மை என்பது அறிவைக் குறிகிறது. வெட்டும் பகுதிக்கு கூர்மை தேவையானது. கைப் பிடிக்கும் பகுதிக்கு கூர்மை தேவையற்றது.




இதுவே ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் கண்டுபிடித்த புதிய அணுகுமுறை ஆகும்.

இந்த மூன்றாவது அணுகுமுறையினால் கைக்கும் சேதம் இல்லை, அதே நேரம் காய்கறிகளையும் நமது தேவைக்கு ஏற்ப நறுக்கிக்கொள்ளும் வாய்ப்பு உள்ளது.

மனதின் அகம்-புறம் என்ற இரு பகுதிகளில் நமக்கு எங்கு வேலை இருக்கிறது, எங்கு வேலை இல்லை என்பதைப் பிரித்துப் பார்த்து புரிந்துகொள்ளும் புதிய அணுகுமுறையே புறத்திற்கு வளர்ச்சியையும் அகத்திற்கு விடுதலையையும் வழங்குகிறது.





## சென்னை ஸ்ரீபகவத் பவன்

**ஸ்ரீ பகவத் அய்யா மீது தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.**

சென்னையில் தற்காலிகமான பகவத் பவன் ஒன்றை அமைப்பதற்கு ஏற்கெனவே முயற்சி எடுத்து வந்தோம்.

தற்போது அய்யா அவர்களின் ஆலோசனைப்படி அதனை, தலைநகரான சென்னையில் நிரந்தரமாகவே அமைத்திட முடிவு செய்துள்ளோம்.

இந்த பவன் அய்யாவின் இல்லமாகவும், வெளியிலிருந்து அய்யாவைப் பார்க்க வருபவர்கள் மற்றும் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் தங்கியிருந்து செல்லும் விருந்தினர் இல்லமாகவும் அமையவிருக்கிறது.

வருடத்தில் பாதி நாட்கள் அய்யா சென்னையிலும் மீதி நாட்கள் சேலத்திலுமாகத் தங்கியிருப்பார்கள்.

இதனை நாம் புதிதாகக் கட்டுவதற்குப் பதிலாக ஏற்கெனவே கட்டி முடிக்கப்பட்ட பிளாட் அல்லது பிளாட்டுகளாக இருந்தாலும் போதுமானதாக இருக்கும்.

ஏற்கெனவே சென்னை ஸ்ரீபகவத் பவன் கட்டடத்திற்காக நிதி வழங்கியவர்களின் நிதியும்இதனை வாங்குவதற்கு பயன்படுத்தப்படும்.

இது சம்பந்தமாக, அய்யா மீது தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட அனைவரும் தங்களது மேலான ஆலோசனைகளை வழங்குமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

அன்புடன்
**ஸ்ரீ பகவத் மிஷன். சேலம்.**

# நிகழ்ச்சி நிழல்கள்




ஆங்கில புத்தாண்டு அன்று பவனில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் திரு.பத்மநாபன் குடும்பத்தினர், திரு. சரவணன் பிரேமா, திரு.குணாலன் ஆகியோர்.



ஸ்ரீ பகவத் காட்டேஜ் கட்டடப் பணி நடைபெறும் இடத்தில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் ஜீவமணி, அன்புக்கரசி மற்றும் USA. திரு ராஜசிம்மனுடன் அவரது நண்பர்.



ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் காலை உணவு வேளையில்...



ஸ்ரீபகவத் காட்டேஜ் கட்டடப் பணியை பார்வையிட்ட போது...





# ஆசிரியர் பகுதி



**K.S. ஜீவமணி**
செல் : 97891 65555

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

பகவத் பாதையில் பயணிக்கும் அனைவருக்கும் புத்தாண்டு மற்றும் பொங்கல் நல்வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கிறோம்.

ஒவ்வொரு வருடமும் புத்தாண்டை நாம் கொண்டாடினாலும் ஞானப்புரிதலைப் பெற்ற நமக்கு ஒவ்வொரு நாளும் புதிய நாள்தான்.

ஞானப் புரிதலை பெற்ற பிறகு அகத்தைப் பொறுத்தவரை கற்றுக் கொள்ளவோ செயல்படுத்தவோ நமக்கு எந்த வேலையும் இல்லை என்றாலும், புறம் அப்படியல்ல. ஒவ்வொரு நாளும் புறத்தில் புதிது புதிதாக கற்றுக் கொண்டும் அதை செயல்படுத்திக் கொண்டும்தான் இருக்கிறோம்.

நாம் இப்புவியில் இருக்கும் வரை நமக்கு செயல் இருந்து கொண்டுதான் இருக்கும். அந்த செயல் நல்ல செயலாகவும் அனைவருக்கும் பயனுள்ளதாகவும் அமைத்துக்கொள்ளவேண்டும்.

**அகத்தைச் சீரமைக்க வேண்டிய கடமை நமக்கு எதுவும் இல்லை. ஆனால் புறத்தைச் சீரமைக்க வேண்டிய கடமை நமக்கு உண்டு.**

இப்படி, அகம் – புறம் இரண்டையும் பிரித்துப் புரிந்து கொள்வதால் மட்டுமே நம்மால் எல்லா துயரங்களையும் துன்பங்களையும் கடந்து விடுதலையோடு வாழ முடியும்.

இப்படி வாழ்வதே ஒரு முழுமையான வாழ்வாகும்.

இதுவரை வந்த ஆன்மிகம் நமது அகத்தைச் சீர் அமைப்பதற்கும் நிர்வாகம் செய்வதற்கும் பல பயிற்சி முயற்சிகளை வழங்கியது.

இதனால் நமக்கு அகத்திலும் வேலை முடியவில்லை. மன போராட்டத்திற்கு நிரந்தர தீர்வும் ஏற்படவில்லை.

நமது பகவத் ஐயாவின் புதிய அணுகுமுறையில் அகத்தில் அறிவின் இயலாமையை புரிந்துகொண்டு சரணாகதி அடைவதால், அகம் சுதந்திரம் அடைகிறது. நமது முழு கவனமும் புறச்செயலில் இருப்பதால் நமது வாழ்வும் சிறப்படைகிறது.

இப்படி ஐயா வழங்கிய ஞான புரிதலால் எல்லா மனப் பிரச்சினைகளையும் எளிதில் கடந்து விடுதலையோடு வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் பலர்.

பலர் பல கோடியாக மாற வேண்டும் என்பதே நமது ஸ்ரீபகவத் மிஷனின் நோக்கம்.

ஞானப் புரிதல் பெற்ற நம்மால்தான் இந்த உயர்ந்த பணியை மனதில் சுமக்காமல் சிறப்பாக செய்ய முடியும்.

அந்த வகையில் சென்ற டிசம்பர் மாதம் 15ஆம் தேதி சென்னையில் ஒரு நாள் ஞான முகாம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது.

இதில் நூற்றுக்கும் மேற்பட்டோர் கலந்துகொண்டு பயனடைந்தனர்.

இதில் சென்னை ஸ்ரீபகவத் மிஷன் தலைவர், திரு. **ரவிச்சந்திரன்** அவர்கள் வரவேற்புரையும் செயலாளர், திரு. **தியாகராஜன்** அவர்கள் அறிமுக உரையும் வழங்கினார்கள்.

திரு. **VAP சரவணன்,** திருமதி. **முத்துலட்சுமி,** திரு. **சந்திரசேகர்,** திரு **ஆனந்த்** மற்றும் இவர்களுடன் நானும் இணைந்து ஞானப் புரிதலை வெவ்வேறு கோணங்களில் விளக்கி உரையாற்றினோம்.

பல உதாரணங்களுடன் மனதின் செயல்பாட்டை விளக்கியதால் ஞான புரிதல் அனைவருக்கும் எளிதில் புரியும்படி அமைந்தது.

இந்த ஞான முகாமில் மறைமலைநகர் திரு. வெங்கட்ராமன் அவர்கள் தனக்கு ஏற்பட்ட மன நோயின் பாதிப்பு பற்றியும் அதற்காக பல ஆண்டுகள் அலோபதி மருந்து எடுத்தும் தீராதது, அய்யாவின் புரிதலால் ஆறு மாதங்களில் மன நோயின் தாக்கத்திலிருந்தும் அலோபதி மருந்துகளிலிருந்தும் விடுபட்ட அனுபவத்தை எடுத்துக் கூறியது அனைவரையும் மன நெகிழ்ச்சியில் ஆழ்த்தியது.

"யாம் பெற்ற இன்பம், பெறுக இவ்வையகம்!"

– என்ற உயர்ந்த நோக்கத்தில், தாம் பெற்ற தெளிவை அனைவரும் பெறவேண்டுமென்று இந்த ஒரு நாள் ஞான முகாமை முழு ஈடுபாட்டோடு மிகவும் சிறப்பாக ஏற்பாடு செய்த திருமதி. **ஜான்ஸி** அவர்களுக்கும் திரு. **ஆனந்த்** அவர்களுக்கும் இவர்களுக்கு உடனிருந்து உதவிய **Hr. முத்துகுமார்,** திரு. **சிவக்குமார்,** திரு.**தினேஷ்குமார்,** கல்பாக்கம் திரு. **தர்மராஜ்** ஆகிய அனைவருக்கும் மற்றும் உதவியஅனைத்து நல் உள்ளங்களுக்கும் ஸ்ரீபகவத் மிஷன் சார்பாக உள்ளம் நிறைந்த பாராட்டுகளை தெரிவித்துக் கொள்கிறோம்.

சென்னையில் இதுபோல் ஞான முகாம் இரண்டு மாதத்திற்கு ஒரு முறையாவது நடத்த வேண்டும் என்று திட்டமிட்டு உள்ளோம்.

இதன்பொருட்டு சென்னையில் நமது செயல்பாட்டை அதிகப்படுத்தியாக வேண்டும். ஆதலால் **பகவத் அய்யாவின் ஆலோசனைப்படி சென்னையில் நமது ஸ்ரீபகவத் மிஷன் மையங்களை அதிகப்படுத்தவும் எண்ணியுள்ளோம்.**

இது பற்றிய ஆலோசனைகளை வரவேற்கிறோம்.

"புரிந்து கொண்ட நாம் அனைவரும் ஒன்று கூடுவோம்!

உண்மையை உலகிற்கு எடுத்துச் செல்வோம்!!"



# ஜென் கதை

## "பூவும் கல்லும் ஒன்றுதான்"

ஓர் ஆன்ம சாதகன் தீவிரமான ஞான தேடுதலில் இருந்து வந்தான். அதற்காக தன் மனதிற்கு அதிகமான பயிற்சி முயற்சிகளை கொடுத்துக்கொண்டு இருந்தான். ஆனாலும், அவன் தேடிய விடுதலை மட்டும் கிடைக்கவே இல்லை. மிகவும் தளர்ந்து போய் ஒரு ஜென் குருவை சந்தித்து தன் நிலையை எடுத்துக் கூறினான்.

குரு அமைதியாக அவனைப் பார்த்து விட்டு கூறினார், "மனம் என்பது வெறும் எதிர்விளைவே, அதற்கு எந்தப் பயிற்சி முயற்சியும் கொடுக்காதே, அதை அப்படியே ஏற்றுக்கொள்" என்றார்.

குருவின் பதில் ஆன்ம சாதகனுக்கு திருப்தி அளிக்கவில்லை. மீண்டும் குருவிடம் "மனதில் ஏற்படும் எதிர்விளைவுகளை யூகித்து அதற்கு தகுந்தாற்போல் மனதிற்கு ஏதாவது பயிற்சி கொடுத்து நாம் விடுதலையைப் பெற முடியாதா?" என்று கேட்டான்.

குரு சற்று நீண்ட நேர அமைதிக்குப் பிறகு "உன் மனதிற்கு மிகவும் பிடித்தது எது? மிகவும் பிடிக்காதது எது?" என்றார்.

"அமைதியே உருவான புத்தரின் முகம் எனக்கு மிகவும் பிடிக்கும், சாக்கடையில் வாழும் பன்றியைப் பார்த்தால் எனக்கு பிடிக்கவே பிடிக்காது" என்று கூறினான்.

அமைதி தவழும் புத்தரின் உருவப் படத்தை காண்பித்து "இப்பொழுது உன் மனதில் எந்த மாதிரியான உணர்வு ஏற்படுகிறது?" என்று கேட்டார்.

"என் மனதில் அமைதியும் ஆனந்தமும் உண்டாகிறது" என்றான்.

பிறகு, குரு சாக்கடையில் வாழும் பன்றியின் உருவப் படத்தைக் காண்பித்து "இப்பொழுது உன் மனதில் எந்த மாதிரியான உணர்வு ஏற்படுகிறது?" என்று கேட்டார்.

"அருவருக்கத்தக்க, சகித்துக் கொள்ள முடியாத உணர்வு தோன்றுகிறது" என்றான்.

குரு கையில் கொஞ்சம் பூக்களையும் கொஞ்சம் கற்களையும் எடுத்துக்கொண்டு அவனை அருகில் இருக்கும் குளத்திற்கு அழைத்துச் சென்றார். குளத்தில் நீர் சலனமற்று இருந்தது. கையில் கொண்டு வந்த பூக்களை சலனமற்ற குளத்தில் ஒவ்வொன்றாகப் போட்டார். சிறு சிறு அலைகள் தோன்றின. ஆன்ம சாதகனைப் பார்த்து "குளத்தில் தோன்றிய அலைகளை நீக்க நீ என்ன செய்வாய்?" என்று கேட்டார். "அதுதான் தாமாகவே மறைந்து விடுகிறதே" என்றான்.

இதேபோன்று கையில் கொண்டு வந்த கற்களை ஒவ்வொன்றாக போட்டார். கற்களைப் போட்டதால் கொஞ்சம் பெரிய பெரிய அலையாக தோன்றியது.

"குளத்தில் தோன்றிய பெரிய அலைகளை நீக்க நீ என்ன செய்வாய்?" என்று கேட்டார் குரு.

ஆன்ம சாதகன் "இதற்கும் ஒன்றும் செய்ய முடியாது. நான் அதை நீக்க எது செய்தாலும் மீண்டும் அலை தோன்றுமே தவிர அலை மறையாது" என்றான்.

குரு அவனிடம் "இப்போது புரிகிறதா? குளத்தைப் பொருத்தவரை பூக்களும் ஒன்றுதான் கற்களும் ஒன்றுதான். எதைப் போட்டாலும் எதிர்விளைவாக அலை தோன்றத்தான் செய்யும். எப்படி குளத்தில் தோன்றிய அலை ஓர் எதிர்விளைவோ அதுபோல் உன் மனதில் தோன்றும் உணர்வுகள் அனைத்தும் ஓர் எதிர் விளைவே. எதிர்விளைவை சரிசெய்ய நீ ஒன்றும் செய்யத் தேவையில்லை. அவை தாமாக மறைந்துவிடும். புத்தரின் அமைதியான முகத்தை கண்டவுடன் ஏற்படும் அமைதியும், ஆனந்தமும் கூட உன் மனம் என்ற குளத்தில் ஏற்படும் அலையே. பன்றியை கண்டவுடன் ஏற்படும் அருவருப்பும் சகிக்க முடியா உணர்வுகளும் உன் மனம் என்ற குளத்தில் ஏற்படும் அலையே" என்றார்.

"அப்படியெனில் மனதில் ஏற்படும் உணர்வுகளில் நல்லவை, கெட்டவை என்ற எந்த பாகுபாடும் கிடையாதா?" என்றான்.

"மனதை பொறுத்தவரை எல்லா உணர்வுகளும் அலைகளே. எதிர் விளைவாக தோன்றி மறைபவையே. அவற்றில் உயர்ந்தது, தாழ்ந்தது என்ற பாகுபாடு எதுவும் கிடையாது" என்றார்.

"மனதில் ஏற்படும் உணர்வுகள் என் செயல்பாட்டை பாதித்து விடாதா?" என்றான்.

"உன் மனதில் வெளிப்படும் எல்லா உணர்வுகளும் குளத்தில் தோன்றும் அலையைப்போன்றது. அது இயற்கையானது. செயல் என்பது உன் அறிவைக் கொண்டு நீயாக புறத்தில் செய்வது. புறத்தில் அறிவோடு செய்யப்படும் உனது வேலை அர்த்தமுள்ளது. அகத்தில் செய்யும் அனைத்து வேலைகளும் அலையை நீக்கச் செய்யும் அர்த்தமற்ற வேலையை போன்றது" என்றார் குரு.

ஆன்ம சாதகன் மனதிற்கு கொடுக்கப்படும் பயிற்சி முயற்சிகளே அனைத்து பிரச்சனைகளுக்கும் காரணம் என்பதை நன்கு புரிந்து கொண்டான். இவ்வளவு காலம் அவன் மனதில் தேங்கி இருந்த நல்லவை, கெட்டவை என்ற உணர்வுகளின் பாகுபாடுகள் மறைந்தன. மனப் போராட்டத்திலிருந்து விடுதலை பெற்று குருவின் பாதம் பணிந்தான் சாதகன்.

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 | Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020
Date of publication : First Week of Every Month | Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555